உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரடிகள்புராணம்

(o)

## காப்பு.

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற றழகுபச் சுடம்பிற்
றிவளமா துடனின ருடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடிதததொரு கரத்திற்
றரிததுயா கிரிபபுறத தெழுதுங்
கவளமா களிற்றின் றிருமுகம படைத்த
கடவுளை யினைந்துகை தொழுவாம்.

## பாயிரம்.

—:o—

### சபாபதி.

#### வேறு.

இந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படு லகங்களின் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடு தந்துபி வளஙகெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம். (க)

### சிவகாமியம்மை.

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலா
நாடக னனந்தசுக நன்குபுனை பந்திரு
ளோடக மணம்பொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்குசிறு பங்கய மிறைஞ்சுவாம். (உ)

## சுப்பிரமணியக்கடவுள்.

தூங்கமத கும்பவுயர் தும்பிமுகா தம்பிசா
தங்குணெஞ்சி ழஞ்சிறு சதங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதா
ளங்கமலா கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவாம். (௩)

## நால்வரலாறு.

தென்பொதிய மாமுனி சிறக்கவரு ளெண்ணெண்
ணின்பவிளை யாடல தெனுங்கடலு ளூயேன
மின்பயிலு மாமதுரை மேவுதமிழ மாறன்
றுன்பமற நல்குகதை சொலலலுறு கின்றேன். (௪)

அற்புத னிருந்தருள் பெருந்துறை யடைந்தே
சிற்பர முணர்ந்துதிரு வாசக முரைப்பா
முற்பக லருந்தவ முயன்றுபெறு மன்பா
லுறபவ மொழிந்தமை மொழிந்திட ரொழிப்பாம். (௫)

## அவையடக்கம்.

கொண்டலன கண்டனருள் கொண்டுதமிழ் பாடித்
தொண்டுபடு மன்பாசெயல் சொன்னெறி தன்னால்
வண்டமிழ தெரிந்தவாகள மறறெனுரை குறற
முண்டெனினு நன்கிதென வுள்ளுவாக ளெள்ளார். (௬)

## நூற்பயன்.

இந்தவள நற்கதை யியம்பினர் நயந்தே
சிந்தையி னினைப்பவர் செவிப்புல நிறைப்போர்
புந்திமகி ழப்புவி புரப்பருடல் விட்டா
லந்தவுல கத்தினி லரன்சபையில் வாழவார். (௭)

பாயிரமுற்றிற்று.



# மந்திரிச்சருக்கம்.

—(*)—

முக்கணொரு நான்குபுய வைந்துமுக முன்னோன்
சொக்கனரு ளன்மைபெறு தொன்மைதிகழ் நன்னா
ட்க்கடு விடத்தையர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைகலொழி வைகைவள நாடு. (௧)

நீண்டகயி லைக்கிறை நிகழ்த்தவரு ளாலே
பூண்டமுனி மெய்த்தமிழ் புகன்றதிரு நாடு
மூண்டபகை செற்றுலக முற்றுமர சாளும்
பாண்டிய னலங்குலவு பாண்டிவள நாடு. (௨)

வேறு.

மேவுமூர் வளம்பலவு மிருந்துளநா டதனினலம்
பாவுமூர் பழமறைதே ரந்தணர்கள் பயின்றுளவூர்
தாவுமூர் விடையேறி தங்கியவூ ரங்குறையுந்
தேவரூ ரினுமேன்மை சிறந்ததிரு வாதவூர். (௩)

அந்நகரின் மறையோரி லருள்புனைமாத் தியர்குலத்திற்
றன்னிகரில் சைவநெறி தலைவனவன் றனித்தேவி
பின்னையா டிருவயிற்றின மென்கொடிபங் கினனருளாற்
றென்னவன்செங் கோன்முதல்வர் திருவவதா ரஞ்செய்தார். (௪)

வேறு.

பொய்மையா முலகின்மாயப் பொங்கிரு ளகலவன்னோர்
தம்மையாழ் நரகிற்றள்ளுஞ் சமயதா ரகைமழுங்க
வெம்மையா ளுடையானன்ப ரிதயதா மரைக ளெல்லாஞ்
செம்மையாய் மலரஞான தினகர ருதயஞ் செய்தார். (௫)

## நாமகரணம்.

வேறு.

மருவாத நெறிபூண்ட மதத்தனெனும் புத்தனுடன்
பெருவாது வென்றுசிவன் பெருநாம மிகவளர
வொருவாத பிறவியிற்சென் றொருநாம முறுதவர்க்குத்
திருவாத வூரரெனுந் திருநாமந் தரித்தார்கள். (௬)

வேறு.

தவமெனும் பெரியவித்துட் டங்கியேயங்கு ரித்துப்
பவமெனும் பங்கநீங்கிப பயிலருட் குருத்துண்டாகி
யவமெனுங் களைக ணீங்கி யாக்குவோ னருளா லுண்மைச்
சிவமெனும் விளைவுண்டாக வளர்ந்தது தெய்வச் சாலி. (௭)

## அன்னப்பிராசனம்.

வேறு.

தேனினொடு கரும்பினெழுஞ் செழும்பாகு முக்கனியு
மானினறும் பாலுமுட னளவியுளங் களிகூர

வினைமிகும் பலயோனிப் பிறவியெனும் பசிதீர
ஞானவமு தன்பர்க்கு நயந்தமுது நுகர்வித்தார். (அ)

## சௌளம்.

காயமுட னுயிர்முயலுங் கருமமெலாம் பரனருளாற்
றாயமனத் துணர்ந்துவினைத் தொகையெழுதி நாடோறு
மாயதுயர் சுகமளிக்கும் யமன்கணக்கி லருமபாவத்
தீயசிகை யில்லார்க்குச் சிறந்தசிகை வருவித்தார். (௯)

## வித்தியாரம்பம்.

குவலயமங் கையைநீடு கோலஞ்செய் தரும்பொன்னு
நவமணியுங் குவைசெய்து நன்குடன்மங் கலநாளிற்
றவமணமுந் திருநீற்றின் றன்மணமுந் தவறாத
சிவமணமும் பெறக்கல்விச் செல்வமணம் புணர்வித்தார். (௧௦)

## உபநயநம்.

இதுநான்மற் றல்லதுநூ லிலையெனு மறுசமய
விதநூலுந் தலநூலும் விரிந்தபுரா தனநூலும்
பொதுநூலென் றுலகனைத்தும் புகழ்மறைநூ லுஞ்சைவ
முதுநூலுந் தரிப்பார்க்கு முந்நூலுந் தரித்தார்கள் (௧௧)

மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலக்குமவ
ரக்கலையுந் தோளாபுலி யதட்கலையா நல்லருளா
லொக்கலையும் பிறக்கலையு மொழித்திடுமா கமகலையு
மெக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லையினில். (௧௨)

உழைக்கரனுக் கன்பாகி யுண்மையறிந் துலகமெலாம்
பிழைக்கவருட் கவிபாடும் பெரியவர்தஞ் செயலெல்லாந்
தழைத்தகலைத் தமிழ்மாறன் றகவோர்க ளுரைக்கவறிந் (௧௩)
தழைத்துரிமைத் திறநல்கி யகலாநண் பாயினன்.

சங்கோல மிடுமெபழனத் தடம்புடைசூழ் வாதவூ
ரெங்கோவின் செய்கையறிந் தியல்புடையா ரெனநாடிப
பொங்கோத வேலைநிலம் புரந்துபெரும் பகைதுரந்து
செங்கோலே முறைநடத்துஞ் செழுந்தலைமைத் திறநல்கி. (௧௪)

## வேறு.

தென்னவன் பிரம ராய னென்றருள் சிறந்த நாம
மன்னவர் மதிக்க நல்கி வையக முய்வ தாக

மின்னவ மணிப்பூ ணுடை வெண்மதிக் கவிகை தண்டு
பொன்னவிர் கவரி வேழ மளித்தனன் பொருநை நாடன். (க௫)

இந்திரச் செல்வம் போல வியைந்துள வினைய மெய்தி
மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாத வூரர்
தந்திரத் தொகுதி சூழ்ந்த தாரகா கணங்க ளோடு
மந்தரத் திழிந்து மணமே லமர்ந்தவெண் மதிய மொத்தார். (கசு)

பெருங்கட லாக நீதி பெருக்கியே தருக்கு நல்கி
யிருங்கடத் ததேனை மேலவைத் தீண்டருள் பூண்ட கோவுங்
கருங்கட னாக மெட்டுங் காளமா நாக மெட்டும்
பரங்கெட வுலக பாரம் பரித்தன ரிருந்த மிக்கார். (கஎ)

காதலித் தறஞ்செய் வோர்க்குக் கவசமுங் கண்ணுமாகி
யேதிலாக் கிடும்பை யாகி யிறைஞ்சினாக் கின்ப மாகி
யாதுலாக் கன்னை யாகி யரனடிக் கன்பு மிக்கார்
பூதலத் திறைவ னாணை பொதுவற நடத்து நாளில். (கஅ)

பற்பல பொருளா யுள்ள பாசமு மதனை மேவி
யுற்பவ பேத மான வுடம்புயி ரொடுங்கு மாறு
மற்புதப் புத்தி முத்தி யளித்தரு ளாலே மேலாந்
தற்பர னடத்து மாறு முணர்ந்தனர் சைவ நூலின். (க௯)

அவ்விய மனத்தி னாலே யனைத்துரு வங்கள் கூடி
யிவ்வுயிர் பிறந்து மீள விறந்திடு மென்றி ரங்கி
வெவ்வெயில் வருந்த முற்றோர் மென்னிழல் விருப்பு மாபோ
லவ்வியு மழுவு மேந்து நம்பனுக் கன்பு மிக்கார். (உ0)

தீத்திற வினையி னாலே சிறைப்படு முயிரா மெல்லாம்
பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறாகு மாபோ
னீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி. (உக)

வாமுடன் புவியிற் றோன்று மறையவர்க் கிறைவ ருண்மை
தருமுணர் வென்னு நாலாஞ் சத்தினி பாத மெய்திப்
பரமவஞ் செழுத்து மொன்றும் பராபர முணர்த்து ஞான
குருபரன் றிருத்தாள் சென்று கூடுதல் வேண்டு மென்று. (உஉ)

மற்கட விலங்கு தன்னால் வளங்கெழு விளவின் மேவு
நற்கனி கொள்ள வேண்டி நயந்துகல் லெறிவார் போலச்
சற்குரு வுளனோ வென்று நாடுவார் தர்க்க மெல்லாஞ்
சொற்கலை ஞான சைவர் தம்முடன் சொல்ல லுற்றார். (உ௩)

வளங்கெழு புலியி னுள்ள வாவியுங் காவு மோடி
விளங்கிசை வண்டு தணடேன் மிகுமலா தேடு மாபோ
லுளங்கொள நிமல னனூ லோதின ருணைகம மெல்லா
மளந்தறி வுணாந்த தீரர் யாவரென் றுயு நாளில. (௨௪)

வேறு

மேதகு வணிதைய ரெங்கணும வீசிய கவரி யசைந்தெழ
மாதவ முனிவாக ளந்தணா மாசறு கவிஞா செறிந்திட
வேதமின் மதிகுல புஙகவ னேர்கெழு மணிமுடி யின்றிர
ளாதவன் மிசையெழ வந்தரி யாசன மதனி லிருந்தனன். (௨௫)

தாதகி மாாப னெடுமபுலி சார்தரு மாழ்கட லின்கரை
தீதில மாதர கங்கொடு சீர்கெழு மாரியர் வந்தன
ரேதமி லாயது கணடனம யாமென வேதொழு தன்பொடு
மேதினி காவலன் முனசில மேதகு தூதாவி ளம்பினா. (௨௬)

ஏவல்செய் வாாகளி லிஙகிவ ரேபரி வானவ ரென்றிகன்
மேவிய தூதரை வனறிறன மீனவா கோனு மகிழநதபின்
வாவுகன் மாதுர கஙகொடு வாருமெ னுவுட னுநதன
தாவியு மாயர னன்புடை யாாமுக நாடி யொழிநதனன். (௨௭)

மீனவர் கோன்மொழி யின்படி வேணிய னேசரியைந்தபி
ஞனன சோதி யுடன்புலி யாளபவன் வாசி கொளுமபடி
வானவி மான மெனுந்திரு வாழவுள கோயில புகுநதுதன்
னீனமி லாநெறி வநதபொான் னேழெழு கோடி வழஙகினன். (௨௮)

விற்படை வெற்றி மடந்தையு மிக்க மலாததிரு வுமபயின்
மற்புய வெற்பின னங்கயல் வைதத வலததன் வழஙகிய
பொற்பு மிகுத்த தனஙகொடு பொறக வனபபரி கொணடிட
கற்பய னதனை முயனறனா நக்கனை நெகருணா கின்றவர். (௨௯)

மெய்த்தவ ருற்ற பெருந்துறை வித்தக ரைக்குறு கும்படி
யித்தகு நற்பொருள் கொணடுகி ரிப்படி யிற்செலு மென்றலி
னத்தகு புத்தி யொழிந்துயி ரற்புத முததி பெறுமபடி
யுய்த்துள சத்தி யுடன்பொரு வொத்தன னுததம பஞ்சவன். (௩0)

பற்றிலர் பெற்ற சிவன்கழல் பற்றின ரைக்கலை வண்டமி
ழுற்ற மலைக்கிறை வன்றனை யொகக மதிததருள் கொண்டலை
விற்றுவ சத்த னெடுமபடை மிகக புலிக்கொடி யன்படை
மற்றுள கொற்றவர் தம்படை வர்க்கமு முற்கொ டெழுந்தன. (௩௧)

உக்கிர சக்கர கங்களி னுச்சி பணிப்ப வசைந்தடி
வைக்கு முரத்தன வெங்கய மைக்கிரி யொக்க மலிந்தன
பக்கமு முற்பிற குந்துடி பற்பல கொட்ட வியங்குவ
தக்க மனத்தில் விரைந்துள தத்து பரித்திரள் வந்தன. (௩௨)

வேறு.

கொங்கணர் கலிங்கரொடு கொங்கர் துளு நாடர்
சிங்களர்க ளொட்டியர் தெலுங்கரொடு சீனர்
தங்குதிறன் மாளவர் மலாடர்தமி லொன்று
யெங்கணு மிடைந்தவர்க ளெண்ணமுடி விலலர். (௩௩)

இத்திற மெழுந்தபடை யெங்கணு நெருங்கத்
தத்துபரி மீதுள தமிழ்க்கவிஞர் சூழச்
சித்திர மடந்தையர் திரண்டிரு மருங்கு
மொய்த்துவர வீணைகுழன் முன்னரிசை கொள்ள. (௩௪)

கட்டுமள கத்தினர் கனத்துள தனத்தார்
பட்டுடை மருங்கினர் பணிக்கவரி வீச
வட்டமதி வெண்குடை வயங்கமுர செங்குங்
கொட்டவுயர் காளமொடு கோடுகள் கறங்க. (௩௫)

மிண்டியுள பாடகர் வியந்துகர வாரங்
கொண்டுபுடை சூழவெழில சோகுழலர் பாடத்
தண்டரள மல்கிய தனிச்சிவிகை மேல்கொண்
டெண்டிசை மிகப்புகழ கயறகொடி யிலங்க. (௩௬)

மங்கல தினத்திநெடு மாளிகை யகன்றே
துங்கமணியகலை யணி சொக்கரை வணங்கி
யங்குவிடை பெற்றுமறை யந்தணரின் மிக்கார்
திங்கணமர பிறகுரிசில கோயிலுழை சென்றார். (௩௭)

சென்றுதமிழ் மாறனருள் பெற்றெழில் சிறக்கும்
வென்றிவள வன்புவியின் மேன்மையொடு செல்வார்
குன்றனைய மாடமொடு கோபுர நெருங்கு
நன்றிமது ரைப்பதியை நன்கொடு கடந்தார். (௩௮)

நெடுங்குட திசைக்கட னிறைந்தொலி சிறந்தே
யுடைந்து தயாற்றிசையி லுற்றுவரு மாபோன்
மிடைந்தபதி யுங்கடமும வெற்புமிவை யெல்லாங்
கடந்துவதி சென்றுபல காவத மகன்றார். (௩௯)

என்றுமுள பொன்றுமுட லென்னுநகர் தோறுஞ்
சென்றவழி மாறியொரு தெய்வவழி செல்வார்
நன்றியுள முத்திபெற நம்பாதம தன்பா
லன்றுயர் பெருந்துறை யடைந்தபடி சொல்வாம். (௪௦)

மந்திரிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௪௭.

# திருப்பெருந்துறைச்சருக்கம்.



வேறு.

பழமறை முழுதுண ரந்தணர் பலர்தொழ நடமுயல் கின்றவர்
மழுவுழை கரமிசை கொண்டிட மருவிய கவுரி மகிழ்ந்திட
விழைதரு மிரசித பொங்கொளி விடுமயர் கயிலை விலங்கலி
னழகுறு தபனிய மண்டப மதனிடை யருள்கொ டிருந்தனர். (க)

மதுமலர் கரமிசை கொண்டுசி லவழிவ ழியடியவ ரென்றுதம
முதுமறை தெரிய மொழிந்தெதிர் முறைமுறை முனிவர் வணங்கின
ரிதுபர னருளை வழங்குவ தெனவரி பிரம ரெழுந்துநம்
பதமிலை பெறவரு ளென்றிரு பரிபுர கழல்கள் பணிந்தனர். (உ)

பரவரு மணிகள் விளங்கிய பணவர வணியர னங்கமு
மருவிய தரள வடந்திகழ் மதிநுதன் மலைமக ளங்கமு
மிரவியு மதியு மிருந்தென வெதிரெதி ரிலகுதல் கண்டன
ரரகர சிவசிவ வென்றுள மயாவுற வழுதன ரன்பினர். (ங)

அடிபொழி மரமென நொந்துபி னவனியில் விழுவதொழிந்து நின்
றுடனுறை பெருமை வழங்குவ துளதுகொ லெனநினை நெஞ்சொடு
மடலவிழ் கடிகம ழைந்தரு மலர்பல முறைமுறை சிந்திமுன்
னிடமிஃ தெனமகி ழ்ந்திர னிமையவ ரெவரு மிறைஞ்சினர். (ச)

வேறு

திண்டிறன் மிகுஞ்சுரிகை யுந்திகழ பிரமபுங்
கொண்டருகு நின்றுகுரு நந்தியருள் கூரப
புண்டரிக மாதுபுவி மங்கையெழில் சிங்கா
வண்டாமட வார்களுல கனைபுற மன்ன. (ரு)

துன்னுபல பூதகண நாதர்புடை சூழக
கின்னரர்கள் கந்தருவர் கீதவிசை பாட
மின்னுமுடி மன்னுநதி வீசுதிரை நன்னீ
ரென்னவொளிர் சாமரை யெழுந்தழகு செய்ய. (சு)

இந்தவள மல்குசபை யின்னல்கெட மன்னுந்
தந்தைமணி மன்றிலுறை தாண்டவ பதத்தோன்
செந்தமிழின் வந்தசிவ ஞானவமு துண்டா
மந்தமி லருட்கடலை யாண்டருள வேண்டி. (எ)

மைத்தகடன் மண்ணவாக டம்முருவில் வம்மென்
றத்தலைய பத்தர்கண நாதரை யழைத்தே
சித்திதரு தேசிக சிறந்தவடிவங்கொண்
டுத்தம நெடுங்கயிலை யோங்கலது நீங்கி. (அ)

கொன்னெறுழி தன்னுருவு கொவடொருவா தேமெ
பொனனடி யெனுஞ்சலச மண்மிசை பொருநதப்
பன்னுமறை வலலவா பரிநதழல வளாபபாா
மனனுமொரு தெயவிக வளமபதியில வநதாா (௯)

வெமபிறவி வேலைதனில் வீழபவா களெல்லா
நமபுசிவ நாமமெனு நறபுணை பிடிததா
லெமபர னருடகரை யிலேறுதுறை யாமா
றமபுவி மொழிநதுள பெருநதுறை யதனபோ. (௧௦)

ஈனமில் பெருநதுறை யெனும்பதியின் ஞாஙகா
கானமிகு புனனைவளா கநதமுள சநதம
வானமுயா சணபக மரந்திகழ நாநதந்
தேனின முரன்றெழு செருநதிகள பொருநதி. (௧௧)

கோடுகவி னும்பெரிய கோஙகுமிக வோஙகும
பாடல நெடுமபலவு பைஙகமுகு தெஙகு
நீடளி யிரைததெழு நிரைககுரவு சூத
மேடவிழ செழுஙகவி ரிலஞசிகண மலிநது. (௧௨)

மாககவின மிகுஙகலப மஞஞைசிறை யனனங்
கூககுரல செயுஙகரிய கோகில நெருஙக
மீககுலவு மநதியின முநதுதொறு மேனமே
லாககுஞிமி றெஙகணு மடாநதிசை தொடஙக. (௧௩)

வீழநதநற வததுளி விழிபபுனல தாகச
சூழநதுமுரல வணடினிசை தோததிரம தாகத
தாழநதுமல ரேநதியிறை தனறிருமு னின்றே
வாழநதருகு மனபரென மன்னுமொரு பூஙகா. (௧௪)

வாய்ததவள மிவவகை வயஙகுமத னுபப
ணோததரு தவசசினைக ளெஙகணு நெருஙக
மீததிக ழறககுழை தழைததுமிளிா மெய்ம்மை
பூததமிஞா போனறெழில பொருந்துமொா குருநதம. (௧௫)

ஆவமுடன் வநதின மகபபட வழைக்கும
பாாவையென மாநதாபடி வஙகொடு நடநதா
ரோவரு குருநதமொ டிலஙகுமுயா காவிற
சோகுவ மெனததிரு வுளததருள சிறநது. (௧௬)

வந்துதிகழ தொணடர்புடை சூழமகிழ வெய்திக
கொந்தலா மலாப்பொலி குருந்தடி பொருநதி
யநதமுத லிலலவ ரருட்டமி ழுரைப்பாா
பந்தமறு மெலலையது பாாததினி திருநதாா. (௧௭)

பொங்குபுனல் யாறுபல போய்விழு கட்டபோ
லெங்குமுள நல்லுயிர்க ளெய்துமொளி யாகுந்
திங்களணி வேணிய திருப்பவடி சேருந்
துங்கமறை யாளாபலா துன்றுநெறி சென்றா. (௧௮)

வேறு.

செம்மனத்து வாதவூர்ச் செல்வர்தமைப் புல்லாத
பொய்ம்மயக்க தரும்பாசம போலமலாந் தனபூவை
எம்மயக்கு மொழிபபவருக இனிப்பிறவி யில்லையெனக்
கைமமறிகரு மவர்போல மலாந்தனவங் குளகாநதள். (௧௯)

விற்காட்டுங் கரத்துமத னம்பாகி வெம்பிறவி
யிற்காட்டி யாவரையு மாகுலஞ்செ யெமபாவ
நிற்காட்டி லொழிப்பவர்யார் நீயருளக வெமககென்று
பற்காட்டி நிற்பவாபோன் மலர்நதனமென பனிமுல்லை. (௨0)

பொற்புடைய தமிழ்பாடும புண்ணியரைப் பொருளினுமாஞ்
சிற்பரனுன் மையில்விழிகரு திருநயனஞ் சோதலினு
னிறபதாம் பிறவியிது வென்றிரங்கி நீண்மரஙகள்
கற்பனையை யுணர்ந்துமலாக கணணீாகள பொழிந்தனவால். (௨௧)

முன்னைவினைப் பெருஙகாடு மூடுறவைம் புலவேடர்
துன்னியலைத திடாசெய்யுந் துன்பவழி செல்லாம
லுன்னருநற் சிவஞான வுபதேசந் தமிழ்செய்வா
ரின்னவகைத் துளகான மெய்தியவா நெறிநீஙகி. (௨௨)

வேறு.

விரிநதகட லுககிடைட் விழுநதிட ருழநதே
திரிந்தவர் நயந்துகரை சென்றறுகு மாபோல்
வருந்தவுழல் வித்தவினை யொததருள வடைத்தா
லருநதவா பெருநதுறை மருஙகினி லணைந்தார். (௨௩)

இந்தவுல கஞ்சிவ னிருக்குமுல காகச்
சிநதையருள் கொணடுதிரு வாசக முரைப்பார்
பந்தமற வந்தமில் பரஙகுறுக வென்றே
வந்துள பெருந்துறையின் வணமையுரை செய்வாம். (௨௪)

மாத்தியர் குலத்தலைவர் வன்பிறவி யெவ்வந்
தீர்த்துலக வையாருள் செய்யுமிட மென்றே
தோத்திர முரைத்துமிசை வந்தசுரர் சிந்தும்
பூத்திர ளுதிாநதவகை போன்றதலா பொஙகா. (௨௫)

## வேறு.

பேறறிந்து தவமுயல்வோ மென்றுபெருந் துறைநாடி
யாறியங்கி யிளைக்குமவாக் களிக்கவெதி ரெறபவாபோற்
கூறுமின்ப நிழல்செய்து குறையாத பத்தியுட
னீறணிந்து சேரநேரநதி நின்றனதான் றியகைதை. (௨௬)

நிலந்தனில்வந் தொருகுருந்த நீழலிலே யெவ்வுலகுங்
கலந்தபொரு ளிருந்தபடி கண்டுமனங் களிப்பெய்தித்
துலங்கியதங் கண்ணீருஞ் சொரிந்துகரங் குவித்துமுக
மலர்ந்தபெருந தவாபோல மலர்ந்தனபுண டரிகங்கள். (௨௭)

ஆன்றபயன் பிறர்நுகர வகத்தினிமை யுளதாகத்
தோன்றியநல் லறிவினர்போற றுவன்றியெழுந் தனகன்ன
லேன்றகுல மாதர்தம திறைவாமுக நாடிலவா
வான்றகைய நிலையென்ன வளைந்துவிளைந தனசெந்நெல். (௨௮)

முலைக்கிரியுங் கருங்கூந்தன் மொய்வனமு மரணாகக்
கொலைப்புருவ வெஞ்சாபங் குனித்துவிழிக கணையேவி
நிலைப்படுநற பொருட்டேட நினைந்துதவ நீணெறியிற்
றலைப்படுவா தமைவருத்துந தன்மையினா வயன்மாதர். (௨௯)

## வேறு.

இன்னவகை மன்னிவளர் காவுமெழின் மேவுங்
கனனல்வய லுநதிகழுதல கண்டுவகை கொணடே
யின்னலுட லமபெற வினிபபுவியில் வாரா
மன்னவா பெருந்துறை வளம்பதியில் வநதார். (௩0)

மாதவா மிகும்பதி புகுந்துழி மருங்கே
நாதனுறை தணடலையி னன்குபுனை தொண்ட
ரோதுறு சிவாகம வொலிப்பொலிவு கேளா
யாதிஃ தறிந்துரைமி னேவலாக ளெனலுூா. (௩௧)

சென்றவர்கள் வந்துசிவ பத்தர்பலர் சூழக்
கொன்றைமுடி வைததகுண வெற்பைநிக ரொப்பார்
நின்றதொர் குருந்தமர நீழலி லிருந்தா
ரென்றலு மகிழ்ந்தன ரிலிப்பிறவி யில்லார். (௩௨)

ஏவல ருரைத்தமொழி கேட்டரனை யெய்து
மாவலொடு காவினை யணைந்தக மலர்ந்து
மேவிய மணிச்சிவிகை விட்டினி திழிநதே
தேவர்பர வும்பரமர் தெய்வசபை கணடார். (௩௩)

## வேறு.

அண்டமெலாங் கடந்தபொருள் பகரு நூலி னளவுரைப்பார் தெளிக்
தயர்வா ரரய்வாராகித்,தொண்டுபெறு மடியர்க ளாற்றொன் பான்மேற் றொ

ன்னூற்றோன் பரனென்னுந் தொகுதி சூழ, வொண்டொடியங் கினனி
ருப்ப விருப்பா லெய்தி யுடனுரைத்துச் சிவஞான முனிவா ரன்பு,
மண்டியமொரு சினிலவணங்கி வணங்கார போல மந்திரியார் மேன்மையுட
ன் வந்து நின்றார். (௩௪)

உருத்திராக் திருமணியை யிலங்கு காதி லொண்சிரத்திற் கந்தரத்தி
லொளிகொண் மார்பிற், கரத்திலணிந் திலகுதிரு முண்டமங்கிக் கனகாந்
த நன்னுதன்மேற் கவினச் சாத்தித், திருத்திகழும் வேதியரு ரம்பொன்
மேனி திகழவத்தகனை டகமகிழவார் செங்கை மீது, பொருத்தமுறும் புத்
தகமே தையா வென்னப் பொய்மையிலாச் சிவஞான போத மென்றார்.

என்றலுமே சிவமேது ஞான மேதங் கிலங்கியிடும் போதமே தியம்பு
வீரே, லன்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே யடியேனு முமக்கடிமை
யாவே னென்ன, நின்றசிவ மொன்றதனைத் தோர்ந்த ஞான நிகழ்போ
தந் தோந்தத்தனைத் தெளித லாமென, றென்றியநற் பொருளவினவி நிற
பார் சிந்தை யுருகுமவகை யுரைசெய்தா ருவமை யில்லார். (௩௫)

வேறு.

உத்தம ரின்ன வாறிய குரைத்தலு முவந்து நாலரு
மாத்திதி பாத மெய்துந் தன்மைய ராதலாலே
யத்திரு மன்று ளாடு மையரிங் கென்னை யாள
வித்திரு மேனி கொண்டா ரெனபது மனத்தி லெண்ணி. (௩௭)

பின்னிது நிலைமை யில்லா விழுடபொருள் யாவும் வேண்டே
னுன்னடி யடைந்த நாயே னுறுபவ மொழித்தல் வேண்டு
மென்னையின் றடிமை கொள்வா யெம்முயிக் கிறைவா வென்று
முன்னுற வணங்கி நின்றா முகமெலாங் கண்ணீர் வார. (௩௮)

இவ்வகை புகன்று முன்றோன் முன்னுற விரங்கி நிற்பத்
திவ்வியா தரரே யான செய்திய ரென்று நாடி
யவ்வடி யவரின் மிக்கா ரொருவரிவ் வடிமை தன்னை
வெவ்வினை யகற்றி யாள வேண்டுமென் றிறைஞ்சி நின்றா. (௩௯)

கருப்புக நினையார் தம்மேற் கண்ணருள் செய்து நெஞ்சிற்
பரப்பற மிதித்தல் வேண்டி யெடுத்தபொற் பாதங் கொண்டு
திருப்புனை மறையோர் போற்றத் தில்லையம் பலத்தே நின்ற
வருட்பரா னந்த வாரி யாதலி னதற்கி யைந்தார். (௪௦)

அத்தகு பகலோன் முன்ன ரலர்செயு மம்பு சாத
மொத்தவர் தம்மை நாடி யுன்னையின் றடிமை கொள்ள
வித்தலத் தணைந்தோ நீமுன் னியற்றிய தவத்தி னாலே
சித்தம திரங்கல் வேண்டா வெனத்திரு வாய்ம லர்ந்தார். (௪௧)

வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றென திலம்பா டென்று
சிந்தையா குலமுற் றன்கைச் செம்பொனா வீதல் செய்வாம்

இந்தநா ளளிக்க வேண்டு மெனவிதி யின்மை யாலே
யந்தநா ளிந்நா ளாக வடிமைகொண் டருள வெண்ணி. (௪௨)

அத்தகு தொண்டர்க ளெல்லா மதிபரா மவரை நோக்கி
யித்தவ முடையோ னெய்து மிடமொழிந் தாள்வ திந்நாள்
வித்தக விதற்கு வேண்டுஞ் சருமநீ விரைவிற் செய்கென்
றுத்தம வடிவங் காட்டு முண்மையா ருரைத்தல் செய்தார். (௪௩)

முன்னவன் புகன்ற வாறு முயல்குவ மென்றே யந்த
மன்னிருந் தவத்தின் மிக்கா வகைமலர்ந் தெரிய லாலும்
பொன்னிடை யழுத்தி முத்தம் புனைந்தடல் படடி னாலு
மந்நெடுங் காவி னூடங் கானபூங் கோயில் செய்தே. (௪௪)

செய்தநற் கோயி லூடு சேர்ந்தவா சனமுஞ் சோத்து
மெய்த்தகு தொண்டர் செல்லா மிக்கவ ரிறைவற் சார்ந்து
கைத்தவ முடையார் நெஞ்சிற் க ்ி்லுங் காண நிலலா
மைத்தரு களந்தாய கோட்டஞ் சமைந்தது வாயபப வென்றார். (௪௫)

ஆயிடைக் குடபால் வெற்பி லாதபன் கரந்து ஞாலம்
பாயிருள் பரந்த பின்பு கடிகையோ ரெண்ணைந் தாகி
யேய்ந்தல வுயிர்க ளெல்லாம் விழித்துயில் பயிலுஞ் சாலைத்
தூயதொண் டர்க்கு மாலை தொலையுநல் லமையந் தோன்ற. (௪௬)

இங்கிவன் றன்னை யாளுங் காலமீ தென்று தெய்வ
சங்கமந் தன்னு முன்னோன் மஞ்சனச் சாலை சார்ந்து
குங்குமம் புழுகு சாந்தங் குழைத்துமெய்ம் முழுதும் பூசிக்
கங்கையி னன்னீர் வாசங் கலந்தமென் பனிநீ ராடி. (௪௭)

மெய்ப்புன றகிலான மாற்றி விலைமதிப் பில்லா நல்ல
வொப்பருஞ் செம்பட் டாடை யுடுத்துயர் கோட்ட மெய்திச்
செப்பிள முலையா ளோர் பாகன் றென்றிசை யதனை நோக்கி
யப்பெருந் தவிசின் மேலங் கழகுற விருந்த பின்னர். (௪௮)

அண்டரு மலர்தூ யேத்து மன்பருந் தூநீ ராடி
வெண்டுகில் புனைந்து நீறு விளங்கிய மெய்ய ராகி
முண்டக மலர்த்தாள் வைத்து முதறிதந் தருள மேனி
கொண்டவன் றிருமுன் சென்று குறுகியங் குவகை கூர்ந்து. (௪௯)

விண்ணவ ரதிபன் பொற்றாள் விளக்கியர்ச் சனைமுன் செய்து
தண்ணறும் பனிநீர் தோய்ந்த சாந்தமெய்ம் முழுதுஞ் சாத்தி
வண்ணமென் கழுநீர் மாலை வளம்பெற வணிந்து பின்னர்க்
கண்ணுறு பரிவு தீரக் கண்டுள மகிழ்ச்சி கொண்டு. (௫௦)

பருப்புட னெனி கேரப் பழச்செழுந் தருவல் சேர்த்துச்
சருக்கரை கலந்து பாலிற் சமைத்தநல் லமுது தன்னை

யிருந்திய கனகக் காண்மே லிலங்குபொற் கலத்தின் மீது
விருப்பொடு படைத்து நெய்யு மிக்கமுக் கனியும் பெய்து. (௫௧)

மாலயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னு
ளாலமுண் டவனே நல்ல வமுதமுண் டருளா யென்று
சீலமா மகிழ்ச்சி பொங்கு சிந்தையி னுரைப்பக் கால
காலனு முண்டு நீராற் கரமலர் கழீஇய பின்னர். (௫௨)

வெள்ளிலை பழுக்காய் நலகி விரைதரு தூப தீபங்
கொள்ளுநற் றேசு காட்டிக் கோலநன் னீறு சாத்தித்
தெள்ளொளி விளங்கு மாடி திருந்தமுன் றிகழ்வித் தெங்கு
முள்ளவர் முடிமே லோங்க வொண்குடை கவித்தல் செய்து. (௫௩)

கற்றைவெண் கவரி செம்பொற் காம்புநீ டால வட்டம்
பற்றியன் புடனே வீசிப் பரிவுட னடியார் சூழப்
பொற்றவி சிடையே மேவும் புண்ணியன் றிருமுன் பைம்போ
துற்றகை யுடனே வாத வூரர்வந் திருந்த பின்னர். (௫௪)

மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்க டத்து வங்க
ளைந்துநற் கலைக ளென்னு மறுவகை யகற்றி யந்தச்
சிந்தனை கரிய மேலைச் சிவத்துட னறிவு சேரப்
பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட் பார்வை செய்து. (௫௫)

எவர்க்குமெய்ஞ் ஞான மாமஞ் செழுத்தையு முணர்த்த வேண்டி
யவத்தொழி லகற்றி யாளுஞ் சிவத்தைமுன் னுகமாற் றித்
தவப்பெரு வடிவங் கொண்டார் தண்டமிழ் பாடு மன்பர்
செவிப்புலன் வழியே சிந்தை யுறத்திரு வாய்ம லர்ந்தார். (௫௬)

வேறு.

விரவு மன்பொரு வடிவுகொண் டணைவார் விழித்த பார்வையின் விளக்கின்முன் னிருள்போற், சுருதி செந்தமி ழாகிய மொழியார் தொலைவிலாதவெந் துயர்ப்பவ மொழிந்து, பரவி மென்பதம் பணிபவர் படிமேற் படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் பரிவான், மருவு மிங்கிவர் சென்னியி லிருதாண் மகிழ வைத்தனர் மதிநதி முடிப்பார் (௫௭)

மன்னு முன்னுள வுயிர்க்கர ணங்கண் மாய்ந்து பொய்ம்முத லறிவிழந் தருளாற், றுன்னு மின்னருட் சிவகர ணங்க டோன்றலாற் சுக வறிவதிற் றோன்றிச், சென்னி யின்மிசை மேவிய பாதந் திருந்து கண்ணிணை சோதிரு கரத்தா, னுன்னல் செய்திடு மிதயமே லணைவித் துவகை கூர்ந்துமெய் யுணர்ச்சியி னெழுந்தார். (௫௮)

மேலை யத்தலத் திந்திர னிமையோர் மீதெ லாம்பொழி விரைமலர் மழையே, போல வித்தலம் புதைபவந் துதிரப் பூத ருங்கண நாதரு மகிழ்ச, சால நற்குணம் புனையுநல் லடியார் தங்கள் செங்கையி லொலியனுந் தயங்கு, மால வட்டமுங் கவரியு மிருபா லசைய மாமுனிக் கணமடி வணங்க. (௫௯)

இருந்த வப்பெருங் கருணைய னெதிரே யெய்தி யன்புடை யியல்பின ரிறைஞ்சிச், சிரந்த னிற்றம திருகரங் குவியாச் சிறந்த பேரரு ணிறைந்த சிந்தையராய், வருந்தி யித்தல மகழ்ந்துமேற் பறந்து மால யன்றேடு மரியநீ யடியே, னருந்து மாப்பவ மகற்றவிங் குருவ மாவ தேயென வழுதுநெஞ் சழிந்தார். (௬0)

ஐய னேயெனை யாண்டருள் புரியு மாதி யேயுமை யணிமழு விருக்குங், கைய னேகொடுங் காலனை முனியுங் கால னேயிரு கண்ணினுண் மணியே, செய்ய னேயடி போற்றியென் பெரிய செல்வ மேயடி போற்றிபொய் யினர்தம், பொய்ய னேயடி போற்றியெவ் வுயிர்க்கும் போத மேயடி போற்றியென் றழுதார். (௬௧)

அறவை ஞான்றிருள் வைகறை யெனும்போ தணைந்த தும்பர னருட் குருவடிவந், துறந்த சார்ந்துடன் முயங்குசெங் கழுநீர்த் தொடையல் வின் சுமை பொறுத்தெனத் துளங்கிக், கறந்து மான்கரத் தேந்திய விறைவன் கவின்கொண் மாமணி மலர்த்தொடை கழித்தங், குறந்த வானுய ரகன்றனல் லடியா ருடனவி ளங்கினா ளங்கமொன் றிலரா. (௬௨)

வேறு.

வாத வூரரை யிறைவர்தம் பெரிய மாயை போலிருண் மாய்ந்தபின் னவாபாற், போத மாகிவந் துறுசுடர் விளக்கம் போல வேயினன் புணரி யிற றோன்ற, வேத நாதாந் திருபத மிறைஞ்சு மெய்ம்மை யாளரை வேறுகொண் டிருந்தங், கோது மாகமத் தறிவரும் பொருளை யுரைக்க வேயினைந் தாரற முரைத்தார். (௬௩)

களிம்பு தோய்ந்தசெம் பெனவுனை மருவுங் கருமை கூர்மலங் கண்டது கலக்கும், பளிங்கு போன்றதுன் றன்மையம் மலத்தின் பற்றி னூடல் பலவெடுத் துழன்றாய், வளங்கு லாம்புவ னந்தொறுஞ் செயுமுன் வல்வி னைப்பயன் வருமுறை நெறியே, யளந்து நாந்தர நுகர்ந்துமே னுகர்வு மாகி யேதிரிந் தனைமன வழுக்கால். (௬௪)

செய்து ளோர்பெறும் வினைப்பய னொருவர் சேர்க்க வேண்டுவ தில்லெனி னிதுமே, லெய்து மேவிது நுகர்வதென் றறிவ தில்லை நீவினை யெனிற்சட மறியா, வுய்த லாகிய நன்னெறி யுணரா வுனையு முன்வினைப் பயனையு முணர்ந்து, மைத வாமல மொழித்தரு ளகலா வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய். (௬௫)

எவர்க்கு மிம்மலஞ் சேரவிங் கொழியா திருப்ப தென்னெனி லின்னல்கொள் பிறவித், துவக்கெ னுந்தம திருவினைப் பயனுந் துலைபு கும்பொரு ளெனவிறை நிகர்த்தா, லவர்க்கு நம்பதங் கொடுத்திட ரொழிப்போ மதுவி லாதவ ரழுங்கியவ் வளவும், பவப்பெ ருங்கடல் வீழ்வர்தம் பருவம் பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார். (௬௬)

என்று கூடுமிப் பருவமென் றியமபில் யாமி ருந்துள விடந்தொறு
மிறைஞ்சி, நன்றி சோசிவ புணணியம புரியு நன்மை யாலிது நறுகுமெ
ன் றறிநீ, மனறி லாணவெம மியலபுனக குரைகளின் மாசி லாவுரு மூன்ற
வற றருவ, மொனறு பேரொளி யொனறரு வுருவ மொனறு தானரு ளுரு
வமென் றுணாவாய். (சுஎ)

இந்த மூன்றினி லுருவுனக் கறிய விசைநத பேரரு ளியமபுமிவ வுரு
வம, லக்தி யாவரும பணிவதற கெளிதாய் வரமெ லாநதர வருமரு வுரு
வம், பந்த மாகிய மலவிரு ளகறறும பரிதி யாயுள பலவுயிாக குயிரா
யநதமாகிக ளளபபரு மொளியா யமல மாகுமவ வருவெனு முருவம. ()

ஆவ லாலெமக காமலா மரஙக ளாகக லமமலா பறித்தலம மலராற,
றூவி லாவகை தாாபல சமைதத றணபபி லெம்புகள சாறறலன் புடனு,
மேவு மாலய மலகிடன மெழுகல விளாஙக நலவிளக கிடுதலெம மடியாாக,
கேவ லானவை செயதலிச சரியை யியறற வலலவாக கெமமூல களிய
போம. (சுக)

கநத வாககமும மிளாமணப புனையும கவினகொ உபமும புனித
மஞ் சனமுங, கொநத விழுநதலா மலருமற றுளவுங கொணடு மாயை
யின் குணஙகளொன றிலாா, மைநது சுததிசெய தசமபுற மிறைஞசி
யஙகி யினகடன கழிததருள வழிபின, றிநத நறபெருங கிரியையன புட
னே யியறற வலலவ ரெமமரு கிருபபாா (எ0)

மூகக ணமபுல னைநதட னடககி மூல வாயுவை யெழுபபிரு வழி
யைச, சிககெ னுமபடி யடைததொரு வழியைத திறநது தாணடவச
சிலமபொலி யுடனபோயத, தகக வருசெழுஈ தோரமுத துருவாந தன
மை கணடரு டருமபெரு வெளிககே, புகசு முநதின ரெமதுருப பெறுவாா
புவியில வேட்டுவ னெடுநதமென் புழுபபோல. (எக)

பாநத வான்கலை முழுதுமா கமநூற பகுதி யுமபல சமயசாத திர
மூந, தெரிநது தோநததில வாய்நதமுப பொருளின செயதி யேபொரு
ளெணமன்ந தெளிநது, புரிநது போநதுள சிறறி வினைநதும போககி
டவ்வறி வெனச சிவ போதம, விரிநது தோனறுமெனு சுடையவிதி தக
ரே மேனமை யானநம மெயபபதம் பெறுவாா. (எஉ)

உருபபொ லாதவரிழிதுலத தவாநல லொழுகக மிலலவ ரென்று
நம் மனவில், விருப்பி லாதவ ரெனினுமெயாந நீறு மிகக சாதன வே
டமுங கணடாற, றரிபபி லாதுசென றெதிருற வணஙகித தகக போன
க மளிததவாக கெளிதா, விருபபா தாமவாக கடியவாக கடியா ரென்
பா யானென தெனுஞசெருக கறுப்பாா. (எங)

விரிந்த சஞசித வினைகளன் புடனும விழிகக வெந்தண விரவுமிப் பிற
ப்பிற், பொருநதும வல்வினை யுடலுட னகலும புநதி சேரருள் வருவி
னை போக்கு, மருந்து யாப்பொரு ளுயிருடம் புனலோ யல்ல நம்மன வா
குமின் குனைப்போ, லிருந்த நங்குரு வடிவைநின் கருத்தி லிருத்து வாய்
பொரு ளிதுவென மொழிந்தாா். (எச)

அத்த ளாதிரு வாய்மலர்ந் தருளு மமல வாசகங் கேட்டக மகிழும், பத்த ளார்தமக கெழுபிறப் பறுக்கும பாத மீதுறப் பணிநதெதி ரெழுந்து பிதத ளனவென் பிழைதனக் கிரங்குமபிஞ்ஞு காமிகப் பேதைமை யுடை யேன, முத்த ளகமெய் காட்டினை யெனவே மொழிந்த ழிந்துகைம மு டிமிசைக் குவிததாா. (எரு)

என்ன வாகமுன் னினைநதுள பொருளு மில்ல தாகிய வுடலமும் யா னு, நினன வாகநின் னருளகொடு நினைந்தே னினம லாவென நின்றுநின் றுருகா, மன்னு தானைதம் மேலணி கலனகண மதுரை மீனவன் வான் பொருளிறையோன். முன்ன தாகவைத திறஞ்சின ரறஞ்சோ முதல்வ ளாமுக மலாவுகொண டிருநதாா. (எசு)

வேறு.

பெருந்துறை யுறைவா ரன்பு பெறுநதிரு வடிய ராகி
யிருநதவா தமமின மேன்மை யெயதினா முகததை நாடித்
திருந்திய பொருளி தெலலாந திருபபணிக களியு மேலா
யருநதவாக குதவு மிலலா தலாநதவாக கருளு மென்றா. (எஎ)

தமபெரு முதலவர் சொல்லுந தருமொழிப படியே யுளள
செமபொருள யாவு மன்பின றிறததுளாா தொலைதத பினன
ரமபர ளளிதத ஞான மருந்தினை யருநதிப் பாச
வெமபிணி யகறறு மிநத விததகா முதத ராளா. (எஅ)

திருததிகழ கவிகைக கீழுஞ சிறநதபொற் சிவிகை மேலும்
வரததிரு மேவு தானை மனனவ னெனன வநதா
ருருதெரி யாத நீறுங கோவண வுடையுங் குஞ்சி
விரிததுள சிரமுந தூசீ மிகபபொழி விழியு மானா். (எகூ)

அன்புட ஞேகி நிறப ரழுவாகை தொழுவர் வீழவ
ரினபுற வெழுவா பினபா லேகுவ ரிரஙகி மீளவா
நன்பகல கஙகுல காணா ஞானநல லறிவே கொணடு
கொன்புனை பிததா பாலா பிசாசாதங கொளகை யானா், (அ0)

மன்னுமிந் நிலைமை யுற்றார் வன்படைச் சுற்ற மாகித
துனனின ரெலலாம வநது தோனறலைத தொழுது நோககித
தென்னவன் *முனியா முன்னஞ் செழுமபரித திரள்கொண டேக
லென்னும தொன்றுந் தேரா விதுபழு தென்றி ரஙகி. (அக)

ஐயர்நீர் வருதல் வேணடு மென்றவ ரழைத்த போதிற்
றெய்வநீ றணிவார் தானைத திறலினா தமமை நோககி
மையலா முணாவின் மிக்கீா யாவாநீா மயூா பேதப
பொய்யெலா முரைததல வேணடாம போமினி யகல வெனறா். (அஉ)

என்னிவர் புகல்வ தென்றே யாவரு நின்றி ரங்கித்
துன்னுநற் றுணை வீரர் தம்முளே துயர மெய்திப்
பன்னுகம் மொழியுங் கொள்ளார் பரிவில ரென்று நீங்கித்
தென்னவற் கின்ன வாறு செப்புவோ மென்று சென்றார். (அங)

சென்றவர் வைகை நாடன் றிருந்தவை முன்ன ரெய்தி
வன்றிறன் மன்ன போற்றி மாமது ரேச போற்றி
யென்றுபின் வாத வூர ரெய்திய செய்தி யெல்லா
மொன்றிய கவற்சி கூரு முளத்தொடு மோத லுற்றார். (அச)

நின்பெயர் புனைந்தோ ராகி நின்னொடுங் கருமஞ் செய்வா
ரென்பவர் செய்கை தம்மை யெங்ஙனம் யாங்கள் சொல்வோம்
பொன்பொலி மௌலி யாய்நின் புடைவிடை கொண்டு போந்து
மன்பெருந் துறையா மந்த வளநகர் புகுந்த பின்னர். (அரு)

அந்நகர் மருங்கோர் காவி லணைந்துள குருந்தி லீசன்
றன்னடி யார்க ளாகுந் தாபதர் பலருஞ் சூழ
மன்னியங் கொருவர் மேலா மாதவ வேடம் பூண்டு
முன்னுற விருந்தல் கண்டு முடிவிலா மகிழ்ச்சி கொண்டு. (அசு)

அங்கவர் தாமுந் தாமு மன்பொடு சிலசொற் கூறிச்
சங்கர சிவனே போற்றி யென்றவர் தாளில் வீழ்ந்து
செங்கரங் குவித்துச் சென்னி சேர்த்தவர் தனைகள் செய்து
பொங்கொளி மணிப்பூ ணுடை பொருளெலா முவந்து நல்கி. (அஎ)

குறைவிலா வாடை நீத்துக் கோவண முடுத்துச் சென்னி
நறைமயிர் விரித்து நீறணை மெய்யெலா நயந்து பூசி
முறைமையன் றிவைதா மென்று மொழிந்தவெம் முகமும் பாரார்
நிறையழி பித்த ராகுற் றிருப்பவென் றிறைஞ்சி நின்றார். (அஅ)

கேட்டலு மதுரை மாறன் கிளர்ந்த மெய்ம் முழுது மவ்வாவு
காட்டிட வெகுளி பொங்கிக் கணகனல வடிவ மாகி
வாட்டிறன் மன்னர்க் கின்ன வன்மைய ருளரேல் வைய
மீட்டுறு செல்வந் தானே யெவையில வென்று நக்கான். (அகூ)

அடுபரி கொள்வ னீந்த வரும்பொருள் கவர்வ தாகக்
கெடுமதி யுரைப்பார் தஞ்சொற் கேட்டுமா லெய்தி யுனைக்
கொடுமைகொ ளிந்த வோலை கொடுத்தொரு கணத்து நமபாற்
கடுநடைத் தூத ரேகிக் கைக்கொடு வம்மி னென்றான். (கூ0)

ஏவலிற் சென்ற தூத ரெழிற்பெருந் துறையி லெய்தி
யாவலிற் சிவன்று ளேத்து மண்ணலைக் கண்டி றைஞ்சி
மேவலார் குருமே றன்ன வெந்தொழில் வேந்தன் வாய்மைக்
காவலாக கதிபன மாறன் றிருமுகங் காண்க வென்றார். (கூக)

அற்றமில் கொள்கை மிக்கா ரரன்றிரு முகம தன்றி
மற்றொரு முகமுங் காண மனமில ரிதன்மே லன்பு
பற்றிலா பிறிதோ ரோலைப் படியெடுத் துரைமி னென்ன
வுறறத னியல்பு வலலா னெழுதிய துவந்து சொல்வான். (௯௨)

தென்னவ னெழுது மோலை தென்னவன் பிரம ராய
னென்னுங மமைசசா காணக வெல்லையி றனங்கொண் டேகிக்
கொன்னுறு பரிகொ ளாமற் கோவணங கொணடீ ரீது
மன்னாதங கருமஞ செய்வா வண்மையென் றுவகை யுற்றேம். (௯௩)

வையக மன்ன ராகி வாழ்தலின் மனைக டோறு
மெய்திய வுதரத தியா லிரப்பது பெருமை யென்று
மெய்தகத தம்மை யாணட வேந்தரைப பிழைத்து வேறு
செய்வது பலிககு மென்றுந தோாதநூற் றுணிவுங் கணடேம். (௯௪)

மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சநஞ் சுமிழு நாகந் ,
தன்னுடன் மருவி வாழுந தன்மையென றுணாதி ராயிற்
றுன்னுமிவ வோலை காணும் பொழுதுநந் தூதா தமமோ
டிந்நகா வருக மாற னெழுத்தென வியமபி நின்றான். (௯௫)

மீனவ னெழுது மோலை கேட்டபின் மின்பா லன்ப
ரானவ ரடியா ரெம்மை யடிமையா வுடைய ரல்லாற்
றானெனக் கன்ன லென்றுந் தன்னையான் பிழைத்தே னென்று
மாநில மன்னன சொன்ன தெனனென மனததி லெண்ணி. (௯௬)

அந்தக னெழுது மோலை கொணடவன் றூதா தாமும்
வந்தெமை யணுக மாட்டா ருடையவா மதுகை யாலே
வெந்தொரு கணததில வீழ மேவலர் புரங்கள் செற்றா
தந்தம ரொருவாக கஞ்சத தகுவரோ வென்று சாறறி. (௯௭)

பேயரன் றிருத்தா ளேத்திப் புண்ணிய வடிவே போற்றி
யாயிரஞ் சுடிகைப் பாம்பை யலரென முடிததாய் போற்றி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னெழுது மோலைப்
பாயிர மிதுகே ளென்று மொழிந்தனா பழுதி லாதா. (௯௮)

கேடிலா வியல்பி னருங கேட்டிள முறுவல் பூத்துப்
பாடலா லேததுந தெய்வப் பானமையாக குவாநது சொல்வார்
பீடிலா தவர்போ லுள்ளம் பேதுற லொழிதி யிந்த
நாடெலா மதிகக நாமே நற்பரித் திரள்கொண் டேகி. (௯௯)

தென்னவற் களித்து மீள்வோஞ் செழுந்திறற் றூத ரோடு
மன்னனைக் குறுகி யென்பால் வரவிடு மோலை தன்னுள்
முன்னுறக் கடிது வந்தே னுவணித் திங்களை மூல
மென்னுமத் தினத்தி லிஙகே யெய்துநற் பரிக ளென்பாய். (௪00)

தொன்மதிக் குலத்து மன்னன் றுயர்செய்வா னென்று சற்று
நின்மனக் கவற்சி கொள்ளா தொழிகென நீறு சாத்திப்
பொன்மணிக் கலன்கண் மிக்க பூந்துகில் பிறவு நல்கி
மன்மனத் துவகை கூர மந்திரிப் பான்மை செய்து. (௧0௧)

தென்றிசைக் கதிபன் றன்பாற் சென்றிது கொடுத்துக் காண்டி
யென்றுமா மணியு நல்கி யேகென விடுத்த பின்னர்க்
கன்றகல் புனிற்று வென்னக் கசிந்திரு கண்ணீர் வார
நின்றுநின் றிறைஞ்சி யையா நீத்தியோ வென்று நொந்து. (௧0௨)

விழிப்புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடைபெற் றேகிச்
சுழிப்புனல் கொழிக்கும் வாவி சூழ்பெருந் துறையை நீங்கி
வழிக்குறு துணையா யுள்ள வளனெலாந் தெழுந்து மோதிப்
பழிச்சுறு தூத ரோடு மதுரையம் பதியிற் போனார். (௧0௩)

மதுரைமன் னவன்முன் னேகி மனமிலா வணக்கஞ் செய்து
கதிர்மதிச் சடையோ னீந்த கவினகொண் மாமணிகை நல்கி
யெதிருற நின்ற போதி லின்புற வழுதி நோக்கி
விதிமுறை யிருமின் னென்ன விருந்தனர் விரிந்த நூலார். (௧0௪)

விலைமதிப் பில்லா வந்த மேதகு மணியைப் பல்கா
ணிலையுற வியந்து நோக்கி நெஞ்சினு ளுவகை யெய்தித்
தலைவனைச் சிந்தை யுள்ளே தரிப்பவர் தம்மை நாடிச்
சிலைமுகக் கரத்து மன்னன் செய்ததே துரைமி னென்றான். (௧0௫)

மலக்கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி
நிலத்தொளிர் புகழின் மிக்காய் நீதரு நிதிகொண் டேகி
யிலக்கணக் குறைபா டின்றி யீரிரு கதியு முண்டாங்
குலப்பரி யினங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர். (௧0௬)

அரும்பரித் தொகுதி யெல்லா மணிதிகழ் மதுரைக் கேகப்
பொருந்திய தினமே தென்னப் பூசுரர் விதியிற் றோர்ந்து
திருந்துமர் வணியாந் திங்கண் மூலநற் றினமா மென்ன
விருந்தன னதனை நாடிப் பெருந்துறை யென்னு மூரில். (௧0௭)

நின்படைச் சுற்ற மெல்லா நீடுமிந் நகருக் கெய்து
மனப்பினிற் கடிது மீண்டா ரவர்பெரும் படிறு கூற
மன்பெரு முனிவர் லோலை வரைந்தனை யதனால் வந்தேன்
கொன்பரித் திரளிங் கெய்துங் கூறுமந் நாளி லென்றார். (௧0௮)

என்பது கேட்டு மாற னுமமிடை யெமக்குண் டான
மன்பெரு நசைபு நீங்க நினைத்துள மனத்தார் சொல்லா
லனபிலர் போல வோலை யெழுதின் மதுகொண் டின்னே
துன்புற லொழிமி ரென்று நன்மையாத் தொன்மை கூறி. (௧0௯).

கொன்னெடுங் கோயி லூடு கொடுபுகுந் துரிமை கூறத்
தன்னரு கிருத்தி மேன்மை தக்கநற் கலைக ணல்கிப்
பொன்னணி கலனகள் யாவும புனையுமென் றளித்து முன்போன்
மன்னுள கருமங் கூறி மனையிடை யேகு மென்றான். (௧௧௦)

தமபெரு மனையிற் சென்று தாபதர் வைகப் பின்னர்
நமபரிச சமுக மெய்து நாளிரண டென்னு முன்னா
வெமபடைச சுற்ற நீங்கி யிருந்துழி விரிநத நேமி
யம்புவிக் கரசன றன்மு னமைசசரி லொருவன் சென்று. (௧௧௧)

போற்றியெம் பொருனை நாட போறறியென் றிறைஞ்சிக் கூறு
மாற்றமுன டொன்று நின்போ புனைநதுள வரிசை பெற்றோா
சாறறருந துரகங கொளள நேரியன றலததிற சார்நது
நீறறின னடியார் கையி னின்பொருள் யாவு மீநதார். (௧௧௨)

நின்பெருந் தூத ரேகி யெழுதுநின் றோலை காட்டும்
பின்புவந துனது சீறற மொழிததுயிர் பிழைகக வெண்ணி
யன்பினர் போல நின்முன் குறுகி யாவணி மூலததி
நன்பரித திரளிங் கெய்து நாலுனக் களிபப னென்றா. (௧௧௩)

மறறவா மொழிந்த வெல்லாம் பொய்யுரை மன்ன வென்னச
சொறறமிழ வைகை நாடன் றூதரைச சுழிதது நோககி
யறறமில் சுருதி வலலா ரருட்பெருந் துறையி லெயதி
யுறறவெம பரிக ளுணடே லொலலைவந துரைமி னென்றான். (௧௧௪)

அருநதிறற் றூத ரேகி யததினங் கடிது மீணடு
வருநதிமுன புகுநது மன்னா மனனனை வணஙகி நின்று
பெருநதுறை யெனனு மூரும் பிறவுள பதியுந தேடிக
கருந்தடங களிறறு வேநத கணடிலம பரிக ளெனறா. (௧௧௫)

பாங்குநின் றின்ன வாறு பகர்தலும் வெகுட்சி யெய்தி
யீஙகுறங கருமஞ் செய்வ னென்றிடர் செய்வான் றன்னைத்
தாஙகருந் துயரஞ் செய்து தகைநதுநந தனததை யெல்லாம்
வாஙகுமின் றணட லாளா ரென்றிகல் மன்னன் சொனனன. (௧௧௬)

மன்பெருந் தண்ட லாளா மறையவர் குலததின் மிக்கார்
முன்புனின் றினைய சொல்வாா முனிவுடை முகதத ராகி
நன்பரித் தொகுதி கொள்ள நயந்துமக கருா ளீநத
தன்பொரு ளெல்லாம் வாங்கச சாற்றினன் சீற்ற மன்னன். (௧௧௭)

மற்றிதன் பயன்யா தென்னின் மன்னவன் விடுப்ப வென்றி
யுற்றவன் றூதர் வல்லை யொண்பெருந் துறையி னெய்திக்
கொற்றவெம் பரிகள் காணர் மீண்டனீர் கோவு தம்பாற்
பற்றிய நேசம் விட்டான் பாரினி யாள வொட்டான். (௧௧௮)

தனையினித் தருதல் வேண்டு மென்றுவன் றண்ட லாளர்
சினமுடன் புகல வாளா விருத்தலுந் தீமை கூறு
நினைவுட னமைச்சர் வாழ்வி னீக்கிமெய் வாக்கின் மன்னர்த்
தனியுற வலிதிற் காவற் சாலையி லாக்கி னாரகள். (ககூ)

சற்றுமுட் டளாவி லாத தன்மையின் வாத வூரர்
மற்றவர் செலுத்தச் சென்று வன்சிறைச் சாலை யெய்த
நற்றவர் வருத்தங் காண நாணமுற் றொழிப்பான் போன்று
பொற்றடந் தேரின் வெய்யோன் போய்க்குட பான்ம றைந்தான். (கஉ0)

கள்ளுலா மிதழி மாலை கவின்பெற முடித்த வேணி
வள்ளலா ரேவச் சென்று வழுதிமேல் வெகுட்சி கொண்டு
வெள்ளைவான் பிறைப்பற் றோன்ற விழுங்கவங் காந்த பேயின்
கொள்ளிவா யனைய வண்ணங் கொண்டது செக்கர் வானம். (கஉக)

தெண்டிரை யுலகி னல்ல திறத்தினர்க் குற்ற தீங்கு
கண்டுணர் சிறியோர் போல நகைத்தன கவின்கொண் முல்லை
வொண்டமிழ் வாத வூராக் குற்றதை யுணாந்து துன்பங்
கொண்டவ ரிதயம் போலக் குவிந்தன கமல மெல்லாம். (கஉஉ)

தென்னவன் வைத்த காவற் சிறையினி லுறையுந் தெய்வ
மன்னவ ரொருவா காணி ஞணமுற றயாவா ரென்றே
யின்னல்கொண் மனத்தாள் போல விருட்கரங் கொண்டு கூடற்
பொன்னக ருள்ளாா கண்கள் புதைத்தனள் கங்குன் மங்கை. (கஉ௩)

மன்பகை துரப்ப திந்த மந்திரித் தலைவர்க் குண்டா
மென்பது முணாதோ வந்தோ வென்செய்து மென்றி ரங்கி
யன்பரை யகன்று நெஞ்சா லழலெழ வுயிாத்து மாழ்குந்
துன்புடை மடவாா போலத் துயின்றிலா மதுரை யுள்ளாா. (கஉ௪)

செம்மணப் புனிதர்க் குண்டாந் தீங்குதங் கிழமை யாலே
யைம்முகக் கடவு ளீன்ற வறுமுகற் குரைக்கு மாபோல்
விம்முசெஞ் சூட்டு முட்டாள் வியன்சிறைச் சேவ லெல்லாந்
தம்மனை யிடங்க டோறுந் தழங்கின புலரிக் காலை. (கஉ௫)

சிற்பர முணாந்து ஞானச் செந்தமி ழோது நீதிப
பொற்பினை யுடையோ ரின்னல் பொறுதுசென் றுரைப்ப போல
விற்பொலி சடிலன் சூல வேலவ னுல வாயி
லற்புதன் கோயின் முன்றி லாாத்தன சங்க மெங்கும். (கஉ௬)

எம்மிறை பரிவி லேறு நாளிதோ வென்று பார்க்குஞ்
செம்மலர் மடவா ளிட்ட திலகசிந் தூரம் போல
வம்மலை மிசையே வைகி யாடகக் கிரிசூழ் போந்து
மைம்மிகு கடன்மேல் வந்து முளைத்தது வால பானு. (கஉ௭)

மணகெழு செங்கோல் வேந்தன் வைகறை யெழுந்து நீராற்
கணகழல விளக்கி மூழ்கிக் கணணுதற பூசை செய்து
தணகிா முத்த மாலை தரித்துநற் கலன்க டாங்கி
விணகிளர் செமபொற கோயின முகப்பினில் வீறறி ருநதான். (கஉஅ)

வன்றிற லாள ரெல்லாம் வாமபரித் திரளகள் கொளவான்
சென்றர னடியாக கீநத செழும்பொரு டார்ீ ராகி
லின்றுமை வருததஞ் செய்து மெனறெறி வெயிலி னூடு
நின்றிடு மென்ன நின்றா ரீளபெரும புகழி னிறபாா. (கஉகூ)

அங்குநின் றினைப்பாா தம்மை யாணடவாண டகையை யுன்னி
யிஙகுணாங் கிலேயோ நாயே னிடும்பையென் றிரகக மெயதிச
சங்கவெண குழையாய் மன்னன் றனககுவாம பரிக ளீத
னஙகட ளுகு மென்று நவின்றசொற பொய்மமை யாமோ. (கஙo)

ஊனுடம் புடைய வாழ்ககை யொழிததுனக கடிமை யென்று
மாநிலம புகலா நிறப வந்துனை யடைநதேன் றன்னை
மீனவன் றன்பான மீள விடுத்தனை வேலை நீரு
ளானபி னங்கீ ராற்று நீரென வாவ துண்டோ. (கஙக)

அறததனிச் செல்வி பாக வன்பிலே னினபா லென்று
வெறுததிடி னடியேற் கிஙகு வேறொரு துணையு மிலலை
செறுததவா புரஙக ளெல்லாஞ் செறறவ ரடியான் றனனை
கிறுததினா வெயிலி னென்று னின்புகழக கேறற மாமோ. (கஙஉ)

வானநா டவர்கரு மேலோய் வந்துனக கடிமை யிப்போ
தானநா னிடுமபை யுற்று லாருனக கடிமை யாவாா
நானெனு மனத்தார் சொல்லு நல்லுரை யன்றி நின்ற
வீனனு மொருவன் சொல்வ தேறுமோ வுளததி லெனறா. (கஙங)

அவதொழில் புரியா மேனமை யன்பருக கன்பு செயது
பவககட லிடைவி ழாமற பரிநதருட் பாாவை நலகித்
தவபபெரு வடிவங கொணடு தாளளித தாளு மையா
செவிப்புலன் புகுநத வன்பா செபபிய மாறற மெலலாம. (கஙச)

காமபடு தோளி பாகன் கண்ணுத லணண லன்பர்
தாமபடு துயரங் கணணி யததுயா தணிகக வெணணித
தேமபடு மலங்கன் மார்பிற் றென்னவன் றனககுத் தெய்வ
வாமபரி யளித்தல் சொல்வாம வஃவினைப் பகையை வெல்வாம். (கஙரு)

திருப்பெருந்துறைச் சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஅஉ.

திருசசிறறம்பலம.

---

# குதிரையிட்டசருக்கம்.

—:0:—

தந்தையென்பவர்மைந்தர்வாதைதவிர்ப்பதேகடனாதலா
லந்தமின்றியகாதலன்பரழுங்கல்கண்டபின்னரியெலாம்
வந்துவெம்பரியாகவும்பரிவீரராவனவராகவுஞ்
சிந்தைகொண்டனரந்தமாலவிதிதேடுவாரமதிசூடுவார். (௧)

தேசிலாநரிவந்துவந்திரண்டுவெம்பரியானபின்
னாசிலாவிமையோர்கடாமுமமைந்தசேவகராயினார்
மாசிலாமணிமன்றராரியவாசிவாணிகர்போலவே
யேசிலாவருமாயினார்மறையிவுளியின்புறமேறினார். (௨)

சேடுகொண்டிரண்டுவீரரிரண்டுஞாங்கர்சிறக்கவே
யூடெழுந்துகளிம்பரெங்கணுமும்பருங்கிளர்வெய்தவே
கோடுடன்றுடிவிம்மநீடியகூடல்சூழ்மதில்வாயிலவா
யாடல்வெம்பரிகொண்டுசென்றனராதியாருமைபாதியார். (௩)

அங்குநின்றவர்சென்றுநம்பவலங்கலானைவணங்கியே
யெங்கணுந்துகள்பொங்கிவிம்மவெழுந்துகாகளமார்ப்பவே
திங்கள்வெண்குடைமன்னவாரியதேசவெம்பரியின்றுநந்
துங்கவன்மதிலின்புறத்துவன்றிவந்தவென்சொனார். (௪)

வாசியின்றிரள்வந்தவென்றலும்வாதவூருறையையமே
னேசம்வைத்தவர்தம்மைமுன்னரழைத்துநீள்கலையாதிதந்
தாசில்வெம்பரிகாணவம்மினெனாவெழுந்தெதிரடையலார்
கூசுந்தன்படைசூழவேயிறைகோயிலின்புறமெய்தினான். (௫)

வேறு.

வண்டுபடியலங்கனெடுந்தடந்தோண்மாறன்மணிச்சிவிகைமீதேறிம
திரைமூதூர, கண்டிருக்கண்களிக்குமவகையாலவாயிற்கடவுளிடும்பரிவரவு
காண்பானெண்ணிச, செண்டுவெளிதனிற்போந்துபனிநீர்தோய்ந்தசெங்க
ழுநீர்மதுமாலைசிறந்துதூங்கும், தண்டரளமணிப்பந்தர்நிழற்கீழம்பொற்றவி
சின்மிசையினிதிருந்தானருனைசூழ. (௬)

முத்தமிழின்றிறநவிலும்புலவர்சூழமுதுமறையோர்மங்கலச்சொன்மு
றையிற்கூறக், கைத்திகழும்வளைபுலம்பக்கலன்கண்மின்னக்கன்னியர்க
ளிருமருங்குங்கவரிவீசக், கொத்துலவும்பலமலரின்வாசந்தோய்ந்துகுலவு
மிளந்தென்றல்வர மாதர்பாட, மெத்துமணிமுத்தமெனும்பணிகள்பூண்டு
வெண்மதியின் றோற்றம்போல் வீற்றிருந்தான். (௭)

மங்குல்படிதடம்புரிசைவாதவூர்மனங்களிப்பவிழிகளிப்பமறுவிலாத, திங்களொனூதனமரபுவிளங்கவென்றுந்திருநீறுமஞ்செழுததுஞ்சிறந்துமல்கச், சங்கினுடனகாகளங்கண்முழவமார்ப்பத்தயங்கியெழுந்துகளுயர்வானறன்மேறசெல்லத, துங்கநெடுங்கடல்பரந்துவருதல்போலததவன்றிவருபரிததிரளினமேருறறங்கணடான். (அ)

வேறு.

அஙகிளாமதுரையமபதியிலாவணித
திஙகளின்மூலநாளசெறிதினததினி
லெஙகளுநீறுமஞ்செழுததுமோஙகிடச
சங்கரனிடுமபரிசசமூகம்வநதவால். (௯)

தூததிரணமணிகெழுசோதிமாமுடிப்
பாாததிபனவிழிநலம்பருகவீதியிற
கூததினாசெயலெனககுலாவுவாமபரிச
சாததினாவரும்பெருநதன்மைகூறுவாம. (௧௦)

வேறு.

கட்டியசுரிகையாகவின்கொளவாளினா
பொட்டணிநுதலினாபொலன்செயமேனியா
படடுடைமருஙகினாபவளநீளவடம
விட்டொளிவிளஙகியவியனகொணமாபினர். (௧௧)

புன்மயிாபபீலியாபுலியினேருலினா
பின்மலாபபாசிலைபிணைததகுஞ்சியா
வனமொழிகருாலினாவயஙகுதூணியர்
வினமலிகரததினாவெறிததபாாவையர். (௧௨)

பொன்னியல்குழையினாபொலன்கொணமாலையர்
பனனிறசசாததினாபணைதததோளினா
செனனியிறகதிாமணியிலஙகுசேடனைப
பினனிவிட்டுளதெனப்பிணைததகுஞ்சியா. (௧௩)

தாஙகியசுரிகையுநதயஙகுவேலகளும
வாஙகியசிலைகளுஙகணையுமவாளுமாய
ஞாஙகரிலிவாவரநாபபட்டோனறிஞா
தேஙகியநதிமதிசசென்னியணணலா. (௧௪)

வேறு.

நசசுரகவுசசிமணிநனனுமொருவணணக
கசசிடைவிசிததுளகவின்கொளுடைவாளும
பசசைமுழுநீலமொடுபன்னிறவடஞ்சோ
செசசைநிறமனனியதிரளடவீருதோளும். (௧௫)

துப்பரியசட்டையுமுடுத்திலகுபட்டுக்
தொப்பியுமுகத்திடைதுலக்கமுளராகிச்
செப்பருநலங்குலவுசெண்டொருகைகொண்டே
யிப்படியிலிப்படிவமயாவருளரென்ன. (கசு)

கட்டுபடிமீதின்மணிகச்சைமணிமுன்பி
ணிட்டவிருபக்கமணியின்னொலிபுலம்பப்
பட்டிலகுபக்கரைபணிக்கவரியெட்டும்
விட்டொளிவிளங்குமொருவெண்பரியிலேறி. (கஎ)

வீசுகவரித்திரணமிடைந்தொளிரமீதே
தேசொடுகவித்துளசெழுங்குடைவயங்கப்
பூசல்புரிவெம்பரிபொருந்துபடையூடே
மாசில்குலவாரியரின்மன்னனெனவந்தார். (கஅ)

மன்னவனுமிங்கிவர்வருந்தகைமைகண்டே
தன்னுளமகிழ்ந்திருந்தடங்கணிமையாமே
யன்னமெனுமூர்தினெடுமாலரினையல்லா
தின்னவெழில்யாவருளரென்றதிசயித்தான். (கக)

பண்ணியதவத்துளபயன்பரியின்மீதே
நண்ணியதெனத்தமினயந்தனாவியந்தா
ரெண்ணியமுடித்தனரெனக்கருதிநின்றா
புண்ணியமறைத்தமிழ்புகன்றதிருவாயார். (உ0)

தூயசுடாவேல்பலசுழற்றியெதிர்செல்வார்
வாயொலிவிளைப்பரிகலவாளினைவிதிர்ப்பார்
நேயமொடுதம்மிலணிநின்றுசமர்செய்வா
ராயினரரன்புடையிலானபரிவீரர். (உக)

நீறுசிவநீதிநிலைநிறகவுலகாளு
மாறனுமகிழ்ந்துதவமன்னரையழைத்தே
கூறரியவாரியகுலேசரொருவீதி
யேறுமவகைசென்றுரையுமென்றினிதுசொன்னான். (உஉ)

என்னிவன்மொழிந்தனனெனத்தமிலிரங்கா
மன்னியவருந்தவரும்வாணமுகமலர்ந்தே
கன்னலைநலங்கொள்கனியைக்குறுகிநெஞ்சான்
முன்னுறவணங்கிவிழிமுத்துதிரநின்று. (உங)

மன்றன்மலரோனுநெடுமாலுமுருவேறா
யன்றுமுதலின்றுமறியாதவகைநின்றாய்
வென்றிவிடையன்றியுயாவெம்பரியின்மீதே
யின்றுனைவணங்கமுனமெத்தவமுயன்றேன். (உச)

வந்தபடியிவ்வுருவணங்குமிதுவல்லா
லந்தவடிவாகிலுனையாரறியவல்லா
ரிந்தவகைகண்டடியவர்க்கெளியையென்றே
சிந்தைதனிலன்பொடுதெளிந்தவுலகெல்லாம். (உரு)

என்றுமுகமன்பலவியம்பியருளாலே
வென்றிபுனைமீனவன்விளம்புமொழிசொன்னார்
கொன்றைமுடியாருமதிலைசந்துகொடைமாற
னன்றியொடுகொணுமவகைநற்பரியுகைத்தார். (உசு)

மன்னரவபாதமுடன்வட்டநெடுவீதி
யென்னுமிவுளிததொழில்கள்யாவுமினிதேறி
யுன்னுமனவேகமெனவோடுமுயாபாய்மா
நன்னடமிடுமபடிநடாததியெதிரவந்தார். (உஎ)

வெமபரியினண்ணலைவியந்துதமிழமாறன்
கமபமுடியெய்தவொருகைவிரல்சுழறறு
வமபொன்விலையில்லதொருஙகலையளிததா
னெமபரமாசெணடின்மிசையேறநகைசெய்தார். (உஅ)

வேறு.

எற்றவொண்கலையைநேசமெய்திஞனொருவன்சென்று
காற்றெனவிரைவினெய்திககடிது தனகரததில் வாஙகிப்
போற்றிலன்முடியின்மீதுபுனைந்திலனெனறுமாற
னீறறினன்மறைப்பினலேநெஞ்சிடைவெகுட்சிகொண்டான். (உகூ)

வெளிப்படவரியமேனிவிண்ணவன்கண்ணுநெஞ்சுங்
களிபபுறவருதல்கணடுஙகணடிலன்கன்னிநாட
னெளிதலுலகெஙகுநிறபோனுறுபவமொழிததுஞான
மளிததிடினன்றியாவரவன்றிறமறியவல்லார். (கூ0)

எண்டிசைமன்னரன்பாலீநதமென்கலைகள்யாவுஞ்
செண்டிடைக்கோடலன்னோர்தேயநல்லியற்கையென்றே
வணடமிழ்வாதவூரர்மாமதுரேசனெஞ்சிற்
கொண்டிடுமுனிவுதீரக்குறைந்துமுன்னின்றுசொன்னார். (கூக)

நலத்தருமிந்தநீர்மைகேட்டபினயந்துமன்னன்
கலககமிலிவுளிநன்னூல் கற்றவா தமமைநோககி
யிலக்கணவிதியானுள்ள விரும்பரியிழிவுமேன்மை
துலக்குறநுமமினுடியெம்முடன்சொல்லுமென்றான். (கூஉ)

சொற்றிகழ்துரகநூலின்றுணிபொருளுணர்ந்துளோருங்
கொற்றவெம்பரிகட்குள்ளகுற்றமுங்குணமுநாடிப்
பொற்றடக்கிரியின்மீதுபொருகயல்பெரித்துமீண்டு
வெற்றிகொண்மன்னர்மன்னன்முன்னிவைவிளமபலுற்றார். (கூகூ)

## வேறு.

தாவிலைச்சந்திரசுழியாமண்டலவாதத்தந்தண்டையடியிர்சுழியாமுடலி ன்பக்க, மேவுசுழிகௌவகமாங்காகாவாத்தமேன்மைதிகழமுன்வலையச சுழிதானுகும, பாவுசெழுங்கேதாரியடியிறசேர்ந்தபயனில்கொடுஞ்சுழிகே சாவர்த்தமாகும, பூவமருங்கசலைசயிறபட்டடையேயாகப்புகன்றசுழியிச் சுழிகள்புணராவாகி. (கச)

கொம்புகன்னந்திருக்கன்னாஞ்சபாதங்கொள்ளிக்கால்வெள்ளிக்கண் டனிகுன்று, வெம்புதழறசுடலைமுகம்பரனோகண்ட மண்டபப்பாழ்விலங்கி பலவண்டமாதல், செம்பொறியாமக்கினிசித்திரங்கண்மூன்றுசிறந்தினிய மட்டிறபாலறுபாலென்றே, யம்புவியோர்மொழிந்தபழுதிவையுமின்றிய டிகாவிறகுரமிரட்டையாகாவாகி. (கரு)

சிரமதனிலிரண்டுசெழுந்துளைபினுன்குசிறந்தவுரந்தனிலிரண்டுநுத ன்மேலொன்று, குரவமிசைநிறசுழியொன்றின்றேடுகுலவியவீரைந்துசுழி குறையாவாகி, நரிவெருக்கருங்காகமலகையோரிஞாளிசெழுங்கேழலெ னுங்குரலின்றாகி,விரவுபெருந்திரைவேலைமங்குலசங்கமயிடைமுழவமபோ னமுழக்கமிகவுண்டாகி. (கசு)

உருத்திகல்செய்புலியுளியங்கழுதைசெந்நாயொணபூனைநரியினுடன் கரியகாகந, தரித்தவழறபுகைநிறமுமபுலையாவாகித்தருக்கிமருத்தெனுங கவனத்தன்மையெய்தி, விரித்தகதிரவெணடரளந்திங்கணீலமெனகமலத தாதுசெழுங்கனகங்காயா, வரத்தமலாநல்லபசுங்கிளிபோல வமைந்த வொளிதயங்கியவங்கத்தவாகி. (கஎ)

நெற்றியகன்றுயர்குரவமபடைத்துவெண்மைநிறைந்துதமிலொத்தில குமெயிற்றவாகித, துறறநறுங்கந்தமிகச்சிறந்துநாவுஞ்சுதவிளந்தளிர்போ லுமருணந்தோய்ந்தே, லுறறவிரண்டிமைமயிருந்தொகையுண்டாகி யுக்கிர மாம்விழிப்பார்வையுடையவாகி, முற்றுமெயிறறசையின்றியுள்வளைந்துமுக் கோணமெனத்திகழுமுகத்தவாகி. (கஅ)

உளையினுடன்றலைமயிருநிறமொன்றாகியுரத்தினுடன்கழுத்துரகபடமே போனறு, வளைசிறந்ததொனிபரந்துக்குவிந்துள்வாங்கிமண்டலமுண்டாயுர ங்கொள்குரங்களசேர்ந்து, கிளைகொணரம்புகள்கரந்துதசைதானுன்றிக் கிளர்முழந்தானெளித்தபதங்கெழுமலின்றி, நெளிமுதுகுபுளைந்துதொடை திரண்டுதண்டைநீணடுடலநெய்த்தநிறநீரமையாகி. (ககூ)

மிக்கசெழுமறைநாவிற்கமலநாதன்விழிப்புனலில்விண்ணோர்களெண் மர்தம்பால், மைக்கடன்மேலமிர்தத்திலங்கிமீதினமல்குகருப்பையினுகவ ண்டர்தன்னிற், றெக்கவெழுபேதமெனுமிவற்றிற்றோன்றுந்தொன்மைய வாயீரிரண்டுதுணைத்தாணைறறி, யொக்கவெளுக்கும்பரிகளுளவாய்வாளி (உ0)

மங்காளன்சாரஙகன்கஙகாநீலன்மெனவழகன்கொங்காளன்சன்னக
ம்பான், குங்குமசோரன்கரியானீலன்சாரன்குலவுமள்ளாஹுரஞ்சிவாநதா
னெல்லான்பொலலான், றஙகுகருஙகாறசமபானென்றுகூறுநதன்மையுளப
ன்னிறமும்புனைநதசாதித, துஙகமிகும்பரியிவையெனறவறறின்றன்மை
தெரிந்தன்மையுரைததரசனைமுன்றொழுதங்கினறா. (௪௧)

நற்பரியினியல்புணாநதோரின்னவாறுநவின்றமொழிகேட்டுமிகநயந
துவெளளி, வெறபனையவிடையேறியளிகருநதெயவவெம்பரிகள்யாவும்வி
லைமதிததபின்னர்ப், பொறபுடையதன்பொருணமேலெண்மடஙகுபோது
தலாறபொஙகுமகிழவெயதிமாறன, றறபரனைமுகநாடிககயிறுமாறிததரு
கதுரகததொகுதிதமமையெனறான். (௪௨)

வேறு.

காத்துலகனைததுமுய்யக்கண்ணருளசெய்யுநீதிப
பாாததிவன்கருமஞ்செய்வாாபற்றியஙகரததிலவாங்கச்
சாததவாதமமிலாஙகோாசால்பினாகயிறுமாறி
யீததனாபந்திபூடுசோததனரிவுளியெலலாம். (௪௩)

திணடிறல்கெழுவுநேமிததென்றிசைககிறையுஞ்செய்ய
வணடமிழ்ககிறையுஙகாணவநதிடுதிசையினேகிப
பணடைநறபாடவமாகிபபணிநதுவிணணவாகளசூழக
கொணடலைபபொருவுகணடாகுலவுதஙகோயிலபுககாா. (௪௪)

வாய்ந்தனபரிசனும்மாலென்றெழில்வாதவூரின்
வேநதரைமனையிலேகவிடுததுளமகிழசசிகூாநது
சாாநதமெயததலைகமையோருநதானையுஞ்சூழவேகி
யாய்ந்தநறறமிழிலவலலவரசனுஙகோயிலபுககான. (௪௫)

அததினமகலமாலையணைததுமபரிகளெல்லா
நிததனதருளினுலெநெடுஙகுரனரிகளாகி
மெய்ததமிழமதுரைமூதூாவிழிததுயிலொழிநதிரஙகத
தத்தமிலுடனறுகூடிததனிததனிகளிததுநின்று. (௪௬)

வேறு.

நின்றநின்றநெடும்பரியாளாமேற்
சென்றுவெமபகைசெய்துவெருட்டியே
தின்றுகின்றதுரங்கமொருஙகொடு
கொன்றுநின்றுயாகூவிளிககொணடவால். (௪௭)

வரைசெய்கோபுரமாடநெருங்கிய
வரசவீதியுமாவணவீதியு
முரசவோசைமுழக்கொழிந்தேமிகக்
குரைசெய்வாய்நரிக்கூக்குரலானதால். (௪௮)

பாடியாரணமபோற்றமன்றிறபயின்
றாடியாரவிளையாட்டின்புதுமையா
லோடியாருமொளித்திடவென்றொரு
கோடியானதுகூவுநரிக்குழாம. (௪௯)

துங்கமாறன்றொகுபடைவெங்கொலை
தங்குமாயுதநதாஙகியெதிரககவே
யெஙகுமானநரிகளெலலாஙகொடுஞ்
சிஙகமாயமாசெயயத்தொடஙகுமால. (௫0)

நீடுவாடையிடந்தொறுநின்றணி
கூடுவார்மிககூவிவெருடடுவா
ரோடுவாரொளிததோடிபபுகுமிடங்
தேடுவாரெதிரசென்றமாசெய்குவார். (௫௧)

எங்களாருயிரகாத்தருளின்றணி
திஙகளாயெனததெயவமபராவுவா
ரஙகபாடமடைததரணசெய்குவாா
மஙகுலாடுமதிறறலையேறுவாா. (௫௨)

நற்றவசசெயனனிலதானதோ
கொற்றவன்செயயகோல்கொடிதானதோ
விறறிதன்பயனெனனெனவினனை
முறறிரஙகினாகூடலுளோரெலாம. (௫௩)

தூயவன்றுரகத்தொழிலாளர்கள்
கோயிலின்கடைககூககுரல்செய்துபோய்
மாயவெமபரிவநதவெலாநரி
யாயவென்றரசறகெதிாகூறினாா. (௫௪)

மாககளோசையுமவாம்பரியோசையுங
கூககுலாவுகுறுநரியோர்சையு
மீககொணமாமுடிமீனவன்றன்செவித்
தீககொள்வேலைசசெருகியதொததவே. (௫௫)

இந்தவாறொலிகேட்டிருகணடழல
சிந்தவாகளுசிறுவெயாபபெய்திட
வந்தமாறன்வெகுட்சிகணடணணலார்
வந்தமாயநரிபபடைமாறறினாா. (௫௬)

பொன்கொணுடன்புனைந்தநலந்திகழ்
மின்கொளாரமவிளங்கியமார்பினன்
றன்கணுகிநடப்பவர்தண்டல்செய்
வன்கணாளரைவமமெனக்கூவினன். (௫௭)

வேறு.

நரியினிற்றொகுதியெல்லாநற்பரிததிரள்களாக்குஞ்
சரிதிலையக்கொணாதிரென்னததாடொழுதவாகளோடி
யிருபிறப்புடையராகியினிபபிறபபிலலாதம்மை
விரைவினிறகுறுகிநமமையழைததனனவேநதனென்றா. (௫௮)

சித்தருககன்பூணடசிததருமுறுவல்செய்து
நிததிலததொளிபோனமின்னுநீறெனுஞசாநதுபூசிய
பத்தருககேவலசெய்வாாபதமலாமுடியிரகுடி
முததமிழபபொருளைநாடனமுன்புசென்றருகுகின்றார். (௫௯)

மூட்டெழுமழல்போன்மனனன்முனிவுடைமுகததனுகி
யீட்டுநம்பொருளகளெலலாமிரபபவாதமககுநலகி
நாடடுளநரிகளெலலாநறபரியாககிநம்முன்
காடடினரிவாசெய்மாயஙகணடிரோவமைசசரென்றான். (௬௦)

தன்றொழில்வழுவினோாகடமககுறுதுயாருசெய்தல
வலறிறலரசாநீதியாயினுமறைவலலாளா
செனறுயாதவததினிறபாாதெரிவையாவிருத்தாபால
ரென்றிவாககுறுகணசெயவதெம்மனோரியலபன்றென்று. (௬௧)

தண்டல்செயவன்கணாளாதஙகளைநோககிநஙகண
கணடிடமுனனிலலாமறகடிதினிலிவாககொணடேகி
மண்டழல்வெயிலினூடுவளைபபினினிறுததிநமபாற
கொணடுளதனஙகளெல்லாஙகுறைவறவாஙகுமெனறான். (௬௨)

வன்றிறலேவலாளாமறறவாதமைககொணடேகி
யொன்றியவளைபபினூடுநிறுததலுமுலகோாபோற்று
நனறிகொள்வாதவூராநரியெலாமபரிகளாககித
தென்றிசைநிருபறகீநதசிததனைநினைநதுசொல்வாா. (௬௩)

தொலலையோரிருவர்தேடுஞசோதியேயாதுசெய்வேன்
றிலலையோாபரவநின்றதெயவமேயாதுசெய்வே
னிலலையோகருணைநின்பாலினறெனையடிமைகொணடா
யல்லையோதமியேனினனலறிதியோவறிநதிலாயோ. (௬௪)

பரித்திரணரியேயானபான்மைகணடடியேன்றனனை
வருத்தினரிதனைமாறறவல்லநீவாராயென்னிற்
றரிததனைவிடத்தையெனனுநதன்மையுமபுரஙகண்முன்று
ளெரித்ததுமெனகொலோவென்றிரஙகினரெவாககுமிககாா. (௬௫)

நன்றிகொள்கடவுட்கங்கைநதியினைவைகையூடு
சென்றெழில்வாதவூராபேரிடாதீரென்றேவி
யன்றொருமடந்தைக்காளாயடியவர்க்கெளியார்கொன்றை
துன்றியமுடியின்மேன்மண்சுமந்ததுமுரைத்தல்செய்வாம. (௬௬)

குதிரையிட்ட சருக்கம் முற்றிற்று.

---

# மண்சுமந்தசருக்கம்.

—.o:—

தங்கியவருளின்மிககார்தாம்படுமிடும்பையுன்னி
யங்கணரவனபாலுறறவருநதுயரகறறுசெனறு
கஙகையைவிடுபபவேகிககடுமபெருககெடுததுவைகைப்
பொங்கலைபபுனலாயெஙகுமபுரணடதுபுணரியேபோல. (௧)

சோந்தவெண்முததமூரல்செய்துநீககலைமேலாததுக
காநதளஞ்செஙகைவீசிககனதனககுருமபைகாட்டி
மாநதளிரபபதஙகணமீதுவருதிரைஞெகிழமாாபபப
போநதுளகணிகைமாதாபபோனறதுவைகையாறு. (௨)

திரைப்பெருமருபபினுலேசெழுநகரையிருபாரகுததி
மரததிரணமுறிததுசசாலிவயலெலலாமழிததுவாயா
னுரைததிராளசிநதிமீதேநுணமணலிறைததுவணடு
நிரைததலினமததவேழநிகாததுவைகையாறு. (௩)

மைத்திகழகுழலாளநதமலைமகணமுலையிறறேய
வததனைவருததுமேன்மையனஙகவாயுதமெனறெணணி
யொததெழுநதொளிருஙகனனலுயஙகுசெஙகழுநீாகளுசம்
புத்தவையளிககவேணடிபபுரணடதுபழனமெலலாம. (௪)

வடம்படைததுடையபாரவனமுலைமுகத்துமாத
ரீடுநதுகில்கடுகிவீழவதென்னநிறைழகுசெயது
தடமபடகிடந்ததெஙகின்றயஙகுசெஙகுருமபைமீது
நெடும்புனற்றிரைபோயமீளநிவந்ததுவைகையாறு. (௫)

மீதெழுபரிதிகையால்விடுஙகதிரவெஃமைதீரப்
பூதலமடவாள்போாககுமபுதியவெணடுகிலேபோல
யாதலாபழனஞ்சோலையாதெனப்பரநதுகஞச
மாதுறைமதுரைமூதூாமதிறபுறஞ்சென்றுசோநது. (௬)

தாங்கியதுவசவாயிறறடமதிலிடியத்தள்ளி
யாங்கெழின்மதுரைமூதூரழிப்பதுபோனறுசெல்லப்
பாங்குளவிடங்களெலலாமபரநததுவைகைநன்னீ
ரீங்கினிச்செய்வதென்னென்றியாவருங்கவற்சிகொணடார். (௭)

மைக்கடுங்களிற்றுத்தானைவழுதியுங்கடிதுநண்ணித்
தொக்கபொன்மலருமுத்துந்துகின்மணிப்பணியுநல்கி
தக்கவண்புவியிலுள்ளோர்தமக்குயிரென்னுமன்னே
மிககநின்கோபமாறலவேணடுமென்றிறைஞசிநின்றான். (௮)

கலைமதிக்குலத்துமன்னன்கன்னிநன்றூடன்கூறுந்
தலைமைமிகவுடையசொல்லாற்றன்முனிவொழிதலின்றி
மலையெனத்திரைகணமேன்மேல்வருதல்கண்டிதுவென்னென்று
நிலையுறச்சிந்தையுள்ளேநேடினனேடிப்பின்னர். (௯)

ஆதியாங்கடவுளெந்தையாலவாயமலன்மங்கை
பாதியானசிறந்தபூசைபண்டையிற்குறைந்ததுண்டோ
நீதியாந்தவத்தின்மிக்கார்நெஞ்சகம்புழுங்கமண்மேற்
றீதியாருசெய்ததுண்டோசெப்புமினமைச்சரென்றான. (௧௦)

விளங்கிளமதிசேர்சென்னிவித்தகர்பத்தரான
வளங்கிசழ்வாதவூரர்வருந்தியவலைப்பினீக்கி
யுளங்கொளமகிழ்ச்சிசெய்யினுறுபுனலூர்கொள்தேன்
றளந்தறிவறிந்துகூறியாங்கவர்தொழுதுநின்றார். (௧௧)

மன்னனுமவர்கண்மேன்மகிழ்ந்தருட்பார்வைநல்கி
யென்னுளமதித்தவாறேயினிதுரைத்தீரென்று
கொன்னுறுவலைப்பினூடிக்கிரகுந்தகுணத்தினரை
முன்னுறவழைத்துநட்பானமுகமலர்ந்திதுமொழிந்தான். (௧௨)

பாம்பணிசெய்யவேணிப்பரமபரனடியார்சைவ
லாம்பொருண்மதேயாறுலறம்பிறாக்கசாவதுண்டோ
தேம்படுமலங்கன்மாபிர்செயலிதற்குமதுமேனி
சாம்பியதலமேயானசெய்தண்டமேதகவிலாமை. (௧௩)

உற்றவித்தகைமுன்னேயுணருமிவ்வுணர்விலாமை
குற்றமித்துணையுநம்மேற்கொண்டனங்குறைகொள்மன்
மற்றினிப்புகலுமாறென்வைகைநம்மூர்கொள்ளாது
நற்றவத்தலைவர்நீரேயடைப்பியுமெனாநவின்றான். (௧௪)

அருட்பெருவழுதியிவ்வாறன்புரைபகர்ந்தபோதுந்
தரிப்பரீதென்னமுன்னந்தழலெனவெகுண்டபோதும்
விருப்பொடுவெறுப்பிலாதமெய்ம்மையாதமையாண்ட
திருப்பதநினைந்தார்வைகைச்செழும்புனலூர்கொள்ளாமல். (௧௫)

சுந்தரப்பரிமேல்வந்ததோற்றமேமனத்திலுன்னி
யந்தரத்திறைஞ்சநின்றீரடங்கியுள்வாங்கிச்செல்ல
வெந்துயர்ப்பிறவியானவிடங்களாவேலைநீந்தி
வந்தருட்கரையிற்சேர்வார்வைகையங்கரையிற்சென்றார். (௧௬)

முறைமுறைவணங்கிநின்றவாரியர்முகத்தைநோக்கி
யறைதிரைநெடுநீர்வைகையினைக்கடிதடைத்தல்வேண்டு
முறையுமிம்மாந்தரெல்லாமொல்லையிலவமஃதினென்று
பறையறைவித்துநம்மூர்க்கிவ்வுரைபரப்புமென்றார். (௧௭)

ஆரியர்கடிதினேடியகன்பறையறைவித்தம்பொற்
றேரியல்வீதிதோறுஞ்சென்றுரைபரப்புமுன்னே
கூரியகொட்டுமண்சேர்கூடையுங்கொண்டுவைகை
நீரியல்கரைமேல்வந்துநின்றனர்மதுரையுள்ளார். (௧௮)

நீறுகொண்டிலங்குமேனிமறையவர்நியமஞ்செய்த
வீறுகொண்டிடங்கடோறுமாரியர்விரைவிற்சென்று
கூறுகொண்டவர்க்கும்வேறுகோலறையளந்துசெங்கை
மாறுகொண்டுறுக்கிவைகைவன்கரையடைக்கலுற்றார். (௧௯)

கண்பெறுகழையின்முத்துங்கடகரிமருப்பின்முத்தும்
வெண்பணிலத்தின்முத்துமேதகுகருமபின்முத்தும்
வண்புனற்றிரைகள்வீசவரையெனக்குவைகள்செய்து
பண்படப்பொருத்திநீருட்பதித்துயாவரம்புசெய்வார். (௨௰)

பரித்திரணிறுத்துமெனபாரபாமபுகளுருட்டுமெனபார்
திரைப்புனன்மிகுத்ததெனபாரதேவாகட்கபயமெனபார்
நிரைப்படுமகிலோடாரநெறிபடவொதுக்கிநீடு
வரைப்பிடைக்குவித்துநிறபாராயினாமதுரையுளளார். (௨௧)

ஏருடைப்புதுநீர்வைகையிவ்வகையடைக்குமெல்லை
நீருடைப்பொலிந்தவேணிநின்மலர்கன்புமிக்காள
சீருடைத்தவத்தின்மிக்காள்செம்மனச்செல்வியென்னும்
பேருடைநரைமூதாட்டிபிட்டுவிற்றுணவுகொள்வாள். (௨௨)

ஆங்கவட்களந்துநீகருங்கோலறையடைப்பதின்றி
யோங்கலைப்புதுநீர்வைகையுடைப்பெலாமடைக்குமெல்லை
நீங்குளதறுகணாளர்சென்றவட்குறுகணசெய்ய
வீங்கெனக்குறுதியாவார்யாவரோவென்றிரங்கி. (௨௩)

பிட்டினைக்கூலிகொண்டுபெருங்கரையடைப்பாரின்றி
நெட்டிலைச்சூலமேந்துநின்மலன்கோயிலெய்தி
மட்டறாததளர்ந்தகொங்கைமார்பினிறகணணீர்வார
வெட்டுருத்திரண்டுபாதமிறைஞ்சிநின்றிதனைக்கூறும். (௨௪)

வேறு.

நெட்டரவக்கச்சுடையாயநீலநிறத்திருமாதின்
வட்டமுலைத்தழும்புபடவந்தணையுந்திருமார்பா
கட்டியசெஞ்சடையாயுன்கண்ணருள்கொண்டெப்பொழுதும்
பிட்டினைவிற்றுண்பேறகுமபேரிடுமைபையுளதாமோ. (௨௫)

யாருடனினிப்புகல்வேனென்னுடையாய்வைகையினன்
னீருடையாதடைக்கும்வகைநீசிறிதின்றருளாயேற்
சீருடையாயுனக்கடிமைசெய்யுமவர்க்கெளியையெனும்
பேருடையாயெனபபலரும்பேசுமொழிபழுதாமே. (௨௬)

